சிவமயம்

KOVILOOR MADALAYAM
KOVILUR-630 307
MANAGIRI VIA

9-5 8386
R65:31

# திருப்புலீச்சரமான்மியசங்கிரகம்.

இது

பெரி-௧-சின்னய்யாசெட்டியாரவர்கள்

வேண்டுகோளினால்,

ஸ்ரீ பொன்னம்பலசுவாமிகள்ஆஞ்ஞைப்படி

ஸ்ரீ பரமேசுவரதீக்ஷிதரவர்களாலும்,

ஷை சுவாமிகள் மாணாக்கர்

சுப்பராயசாமியவர்களாலும்

சங்கிரகிக்கப்பட்டு,

சபாபதிசெட்டியாரவர்களால்

சென்னை:

மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

விகாரி௵ சித்திரைமீ.

1899

9-4



சிவமயம்.

# முகவுரை.

ஸ்ரீ-சிதம்பரத்தில் வியாக்கிரபாதமுனிவர் ஆராதித்துவந்த எவ்வனேசுரர்கோயில்என்று வழங்கிவருகின்ற ஸ்ரீ-புலீச்சரமானது புராதனமா யுள்ளதென்றும், மூலபுராணங்களிற் பிரதிபாதிக்கப்பட்டுள்ளதென்றும், அநேகம் பெரியோர்கள் வந்து தரிசித்ததென்றும், சிவபெருமான் ஆன்மாக்களுக்குப் போகமோட்சங்களைக் கொடுத்தருளும்பொருட்டு எழுந்தருளி விளங்காநின்ற திவ்யக்ஷேத்திரங்களுள் இதுவும் ஒன்றென்றும் யாவர்க்கும் விளங்கக் கோயிற் புராணம், சிதம்பரபுராணம், பெரியபுராணம் ஆகிய இவைகளினின்று சில சரித்திரங்கள் எமதுசிற்றறிவுக்குத் தோன்றிய மட்டில் எடுத்தெழுதப்பட்டது.

கற்பகவிநாயகர் துதி.

பொற்பதப் பொதுவார் புலியூர் புகழ்
சொற்பதப் பொருளாகுவ தூயவ
ரற்பகற் றொழுவாழணி கோபுரக்
கற்பகத் தனியானை கழல்களே. (க)

நடராஜர் துதி.

பூங்கமலத்தயனுமலர்புண்டரிகக்கண்ணனுந்
தாங்குபலபுவனமுமேற்சகலமுமாயகலாத
வோங்குமொளிவெளியேநின்றுலகுதொழநடமாடுந்
தேங்கமழும்பொழிற்றில்லைத்திருச்சிற்றம்பலம்போற்றி. ()

எவ்வனேச்சுரர் துதி.

திருவளர் தில்லை வனமதி லெவன தீர்த்தமேற் கரைபுலிப்பாத, வுருவளர் பத்தியாலருச்சனை பெற்றுயர்கதியனேகருக்கருளித், தெருள்வளரெவ்வனம்பிகையோடுந் திருவருளனைவர்க்கும் பாலித், தருள்வளரெவ்வனே சனற்றுளேயகத்துள்வைத் தனுதினம் பணிவாம்.

வியாக்கிரபாதமுனிவர் துதி.

வருத்தமுற்றொருவன்றன்பெருஞ்செல்வமன்னுயிரனைத்துக்குமளிக்குங், கருத்தெனத்தவஞ்செய்தொருபரம்பொருளின்கருதருமானந்தநடனந், திருத்தமாப்பெற்றுத்தெளிவிலாதவருந்தெரிசித்துவிடுறச்செய்த, வுருத்தபேருள்சேர்புலிப்பதமுனிவனுவமையிலடிகளைப்பணிவாம்.

சிவமயம்.

# ஸ்ரீ - சிதம்பரத்தில்

எவ்வனேசுரர் கோயில் என்று வழங்கிவருகின்ற

# திருப்புலீச்சரமான்மிய சங்கிரகம்.

ஸ்ரீ - மது உமாபதி சிவாசாரியரருளிச்செய்த

கோயில் புராணத்திலுள்ள

## வியாக்கிரபாதச்சருக்கம்.

நிலைபெற்ற வரிய முனிவர்களுள்ளே, மத்தியந்தினரா கிய மகா முனிவரிடத்திலே சர்வ வுலகத்தவரும் பிறவித் துன்பத்தினின்று நீங்கும் வண்ணஞ் சொல்லுதற் கரிய சிவ ஞானத்தையும், சிவபக்தியையும் விளைவிக்குந்தன்மை மிக் கோங்கத் தனக் கொப்பில்லாத திருவருளினு லொரு திருக் குமாரர் திருவவதாரஞ் செய்தனர். பிதாவாகிய மத்தியந் தின மாமுனிவர் ஒப்பில்லாத அந்தக் குமாரரைத் தழுவிக் கொண்டு உச்சியை மோந்து நாமகரணமுதல், உபநயன மிறுதியாகிய கருமங்களெல்லாவற்றையு முறையே செய்து அரிய வேதங்களையும், மற்றை நூல்களையுங் கற்பித்து உயிர்த் துணையாகிய ஸ்ரீ - பஞ்சாட்சரத்தை முறைப்படி யுபதேசி த்து அக்குமரரை நோக்கி இனி யாம் உனக்குச் செய்ய வேண்டுவது யாதென்று வினவி யருளவே ஆதித்த சந்நிதி யிற் சூரியகாந்த மூமிழவுதித்த அக்கினிபோல ஆசாரியரை

யதிட்டித்த சிவபிரானது திருவருளினல் ஞான முதிக்கப் பெற்ற அப்பாலமுனிவர் தமது தந்தையாருடைய திருவடிகளை வணங்கி வேதாகம நூல்கள் ஆதியிலே சொல்லிய அரிய தவங்களுள் மேலாகிய தவத்தை அடியேற்குத் திருவாய் மலர்ந்தருளவேண்டுமென விண்ணப்பஞ் செய்தார். தவங்களெல்லாவற்றையும் அறிந்த மத்தியந்தின முனிவர் குமாரருடைய முகத்தை அருளோடு பார்த்து அரிய தவங்களைப் பண்ணினல் சுவர்க்கமுதலிய புவனங்களிலே நிறைந்த போகங்கள் கிடைக்கும். இது சிவலோகத்துக்குப் போம் வழியன்று. சிவபூசையைத் தேடுத லுண்டாயின் பிறவி நீங்கும், சிவபோகம் பெறலாம் என்று அருளிச்செய்தார். பாலமுனிவர், தமக்குத் தந்தையார் உபதேசித்த திருவாக்கையுட்கொண்டு சிவபெருமான் திருவுளமகிழ்ந்து வெளிப்பட்டு எழுந்தருளி யிருந்துள்ள புண்ணியதலம் அருளிச்செய்யும் என்று விண்ணப்பஞ் செய்ய, அப்பாலமுனிவருக்கு மத்தியந்தின மகாமுனிவர் பூமி முழுவதும் சிவசந்நிதியேயாகும்; அப்படி யன்றென்று காண்பது பண்ணப்பட்ட தவங்களில் குறையாமென்று அறிவாயாக; அங்ஙனமாகு மெனினும், சரீரமெங்கும் வியாபித்த ஆன்மாவுக்கு முக்கியத் தானம் உண்டானாற்போல் உலகமெங்கும் வியாபித்த சிவபெருமானுக்கு முக்கியத்தானமாய் விளங்கும் புண்ணியதலம் உண்டென் றருளிச்செய்தார். உலகத்துள்ள ஆன்மாக்களுக்குச் சலனம் வாராமல் உபகரித்துக்கொண்டு பூமிக்கு நடுவே நிற்பதாகிய ஒப்பில்லாத மகாமேரு பருவதமும், அதன் பக்கங்களிற் சூழ்ந்த அட்டகுலப் பருவதங்களும், அவைகளின்

நடுவேயுள்ள எட்டுக் கண்டங்களும் நிறைந்த ஆன்மாக்கள் பூமியிற் செய்த கருமங்களுக் கீடாக அவற்றின் பலமனுபவி ச்குஞ் சுவர்க்கத்தைப்போலப் போக பூமிகளாமென்று சிவ பெருமான் கழித்தார். நன்மைபொருந்திய நாறுகள் முளை த்து வளர்கின்ற சிறு வயல்போலு மென்று சொல்லத்தக்க நெருக்கம் பொருந்த எவ்வகைப் பெருமையுடைய போகங்க ளெல்லாவற்றிற்குங் காரணமாக வைக்கப்பட்ட இந்தக் கரும பூமியாகிய பரதகண்டத்திலே இடம் போதாதபடியால் ஒன் றோடொன்று நெருங்கும் நிலைபெற்ற ஆன்மாக்கள் முத்தி யடையும் பொருட்டுத் திருவுள்ளத்திலரும்பிய பெருகிய திருவருளினாற் சிவபெருமானும் இக்கரும பூமியைப் பொ ருந்தி எண்ணில்லாத புண்ணிய தலங்களைக் கைக்கொண் டருளினார். இந்தக் கருமபூமியிலே ஆயிரகோடி புண்ணிய தலங்களுண்டு; அவற்றுள்ளே, மிகவும் நன்மை பொருந் தும்படி தாம் இடமாகக்கொண் டருளிய அழகினையுடைய தில்லைவனத்துள்ள மூலத்தானத்திலே சோதியாய் முளைத் தெழுந்த சிவலிங்கரூபியாகிய கடவுள் உனது பூஜையைக் கொண்டருளுவனென்று திருவாய்மலர்ந்து விபூதியை நெற் றியிற் சாத்தி விளங்குகின்ற உச்சியை மோந்து எம்முடைய பிறவிக்குக் காரணமாகிய பாசநீறுகும்படி அவதரித்த பிள் ளையே என்று தழுவிக்கொண்டு பிரிவாற்றுமையினாற் கண் களினின்றும் நீரைப் பொழியாநின்ற மத்தியந்தன முனிவ ராகிய தந்தையாரை வணக்கஞ்செய்து பிள்ளை பிரிகின்றேனே யென்று அஞ்சுந் தன்மையுடைய மாதாவையுந் திருவடியில் வணங்கி அனுமதிபெற்றார் பாலமுனிவர்.

இவ்விதம் பூலோகத்தார் பிறவித்துன்பத்தினின்று நீங்கும்படி திருவருளினாலே தெற்கு நோக்கி வருபவராகிய பாலமுனிவர் கருமைநிறைந்த சமுத்திரசலம் குளிர்மையாகிய நட்சத்திரங்களைப்போல முத்துக்களைப் புரளும்படி ஒதுக்காநின்ற கரைகள் தன் பக்கங்களி லோங்கப்பெற்ற தில்லைவனத்தி லெழுந்தருளியிருக்கும் அண்டங்களைக் காப்பவராகிய சிவபிரானது திருநாமமாகிய ஸ்ரீ-பஞ்சாட்சரமே வழித்துணையாக சிங்கமும் யானையுந் திரிகின்ற வழியும், கண்ணானது நுழையவொண்ணாத இருள்செறிந்த உயர்ந்த காடுமாகிய முன்னே தான் காணாதவைகளையெல்லாங் கண்டு நீங்கினார். பழைமையாகிய நான்கு வேதங்களும் தங்கள் வாக்கு ஒழியுந்தன்மை சிறிதுமில்லையாகும்படி கடல்போல ஒலிக்கின்ற காட்டுமார்க்கமும், ஒழுகுகின்ற தேனைப்பருகும் புதிய வண்டுகளுக் கிடமாகிய மணம்வீசிய நீண்ட குவளைகளையுடைய கழியும் நீங்கும்படி நடந்துவந்து அலர்ந்த பொற்றாமரை மலர்களையும், பாசத்தைப் போக்குஞ் சிவகங்கையாகிய திருக்குளத்தையும், நீர் பொழியாநின்ற கண்ணும், மனமுங் களிகூர புதிய பெரிய பாலமுனிவர் கண்டு துதித்தார். அச் சிவகங்கையை வணங்கி அதற்குத் தென்புறமாகப் பொருந்திய வழியே விலங்காமல் மிக்க வன்புடனே நடக்கும்போது ஓராலமரத்தின் நீழலின்கண்ணே பிரியாத சிவலிங்கப்பெருமான் தம்மெதிரே வெளிப்பட திருமுன்னே பூமியிலே எட்டுறுப்புந் தோயும்படி வணங்கியும், எழுந்திருந்தும், கண்களினின்றும் பயிலாநின்ற கண்ணீர் மழையைப் பொழிந்தும், தம்மை யிழந்தும் தெவிட்டாத வமிர்தமே!

தமியேனை அடிமையாக வுடையவரே! ஞான மூர்த்தியே! என்று சொல்லி வேதங்களை யோதினர். அனாதிகாலந் தொடங்கி ஆன்மாக்களைப் பெத்தமுத்தி இரண்டினு மாண்டருளும் பதியேயாயினும் மேன்மை தக்க சிறப்புடைய மூலத்தானமாகிய இந்தத் திருப்பதியை ஆளுதலையுடைய முக்கண்ணரே! பொற்றாமரை நிறைந்த சிவகங்கையையுடைய சுத்தரே! விபூதிபொருந்திய திருமேனியுடையவரே! எல்லாப்பொருட்கு முடிவே! மெய்யடியார்க் கினியவரே! அடியேனாகிய என்னுடைய விருப்ப நிறைந்த பூசையை வெறுக்காது கொண்டருளுமென்று விண்ணப்பஞ்செய்து சிவகங்கையிலே ஸ்நாநம்பண்ணி அதிற் பலவாகிய அன்றலர்ந்த பூக்களை எடுத்துவந்து அருட்டிருவடிகளைப் பூசித்து வணங்கினர்.

இவ்விதம் கெடுதலில்லாத பெரிய பால முனிவர் திருக்குளத்திலுள்ள பெரியபூக்களைக்கொண்டு பூசித்துத் தில்லைவனத்திலே மேற்குப்பக்கத்திலே போகும் ஒரு வழியே செல்லுகையில் மணத்தையுடைய பெரியபூக்களையும், வாவியையும், கரையையும், வெளியிடத்தையும் கண்டணுகி வலிபொருந்திய மரமேநிழல் செய்வதாக அழகுநிறைந்த ஒரு சிவலிங்கந் தாபித்து ஆசையோடு அவ்விடமே தமக்கிடமாக ஒரு பன்னகசாலை யுண்டாக்கி அவ்விடமும், திருமூலட்டானமுமாகிய இரண்டிடத்தும் வணங்கிக்கொண்டு சிவபெருமானைத் துணையாகப் பொருந்தியிருக்கும் நாளில் பிராதக்காலம் பொருந்த விபூதிதரித்துச் சந்தியாவந்தன முடி

த்த பெரிய பாலமுனிவர் சலங்கமழ்கின்ற கமண்டலமும், கண்டும், திருப்பூங்கூடையுள் நிறைந்த பலபூக்களும், சமித்துக்களும், விளங்குகின்ற தருப்பை அறுகு முதலிய புற்களும், சாகை மூலபலங்களும், பளாசிலையும் கொண்டு வந்து அதன் பின்னர் தாழ்ந்த சடை எட்டும் உயரக் கட்டி முடித்து ஒரு தினம் திருமுன்சென்று விளங்காநின்றபூசையைச் செய்தற்கு மணம்பொருந்திய பூக்களை ஆராயும்போது குற்றமிகுந்த பல பெரும் பூக்களைக்கண்டு இங்ஙனஞ்சொல்லிச் சோகிப்பாராயினர். பூக்களை விடிந்தபின் எடுக்கவெனில் வண்டுகளூதும், இராத்திரியில் எடுக்கவெனில் ஒருவழியுந் தெரியாது, கோங்குமுதலிய மரங்களில் எடுக்கவெனில், கணுக்கள் மிக நீள வளர்ந்தபடியினாலே கையும், காலும் வழிகின்ற பனியினால் வழுக்கும். ஆதிகாலத்திலே பகைவராகிய அசுரரை முப்புரத்தோடும் எரித்தருளிய சிவபெருமான் வண்டுகள் மிகுந்த தேனையுண்டு ஊறுபடுத்திய பூவும், பழம்பூவும், நல்லபூவோடு பொருந்தியேறிய அரும்பும் குற்றமுடையனவென்று சிவாகமத்தி லருளிச் செய்தார். இதற்கு யாதுசெய்யற்பாலதென்று சொல்லித் துக்கமுறுவாராயினர்.

குளிர்மைபொருந்திய பிறையைத் தரித்த சடாமுடியையுடைய நாயகரோ! இழிவாகிய பிரபஞ்சவாழ்க்கையைத் தீர்ப்பவரோ! கண்பொருந்திய நெற்றியையுடையவரோ! ஒரு மான் பொருந்திய கையையுடையவரோ! பாம்பையணிந்தவரோ! பிறவிக்கு மூலமாகிய பாசத்தை அரிப்பவரோ! பூமியி

லுள்ளார் துதிக்குந் தில்லைவனத்தை நீங்காத சிந்தாமணியே! தமியேனை ஆட்கொள்ள விரும்பினீராயின் அடியேனிடத்தே பத்திஞான வைராக்கிய மில்லாமையைச் சிந்தியாது அடியேனினைத்த வரங்களைத் தந்தருளும், வேறொரு சுகத்தையும் அனுபவிக்கும் விருப்பமில்லேன் என்று தளர்வாராயினர். அன்பினாலே மனங்கனாய வணங்குவோர் இலராயின் அருள்செய்யீரென்னும் உண்மையை யறிந்தும் விடாத என்னுடைய பூசையும், பொய்யன்பும், நானும் உமக்கு எங்கேயென்று நொந்து சோகிப்பவராகிய பாலமுனிவரெதிரே, பிறைபொருந்திய சடையையுடைய தேவதேவராகிய சிவபெருமான் பக்கத்திலே வலிய பூதங்கள் மிகச்சூழும் இடபத்தின்மேல் எழுந்தருளிவர நேரே திருமுன்பு பூமியிலே வணங்கி இரண்டுகண்களினின்றும் முகம்வழியாகச் சொரிந்து நிறைந்த நீரினாலே ஸ்நானஞ்செய்தார் அப்பாலமுனிவர். ஆலமர நிழலின்கண் எழுந்தருளியிராநின்ற சிவபெருமான், அமிர்தமயமாகிய திருவாக்கினால் பெரிய பாலமுனியே நமக்குச் செய்யாநின்ற பூசையில் வைத்த ஆசையையுடைய உனது நல்லொழுக்கம் விளங்கும் உண்மையைக் கண்டுநாம் மனமகிழ்ந்தேம். நீ நினைத்தவரங்கள் பலவற்றைச் சொல்வாயாக என்றருளிச்செய்ய அதுகேட்ட பாலமுனிவர் அடியேனுடைய கால்களும், கைகளும், புலிக்கால்களும், புலிக்கைகளும்போல வலிய உகிர்ப்பற்றுடையனவா யிருக்கும் பொருட்டும், அங்கே அவைகளிலே கண்கள் பொருந்தும் பொருட்டும் இரங்கியருளிப் புட்ப விதிப்படி புஷ்பத்தைப் பெற்று செய்யப்படும் முதன்மையாகிய பூசையைக் கொண்

டருளுமென்று வரம் வேண்டிக்கொண்டார்; எமது பிதாவா கிய சிவபெருமான் அவ்வரங்களைக் கொடுத்தருளினர். தேவர்களுங் காண்டற்கரிய மேலோராகிய சிவபெருமானே தமியேன்பொருட்டு இவ்விடத் தெழுந்தருளிவந்து வேண்டிய வரங்களைத் தந்தருளுவாரென்று ஆறுகண்களினின்றும் பாயும் பெருநீர் ஆற்றுக்கால்போல ஒழியாமற் பெருகும் பத்திமையால் பூமியில் எட்டுறுப்புந்தோய நமஸ்கரிக்க உமாதேவியாரோடு மறைவாராகிய சிவபெருமான் ஆகாயமார்க்கமாகச் சென்றருளியபின் பூமியினுள்ளார்கள் எங்கும் பரவுதல் பொருந்திய "வியாக்கிரபாதர்" என்னுந் திருநாமத்தைச் சொல்லினர்.

வண்டுசேள் எழுங்காலம் பின்னுகமுன்னே பொய்கையையடைந்து இன்றியமையாத நியதிமுடித்தலை விரும்பிச் செய்து வேதங்களை அன்பினேடும் உச்சரித்துக்கொண்டு சென்று மணநிறைந்த மந்தாரமுகையும், செருந்தி மலரும், குராமலரும் நிறைந்த பாதிரி மலரும், கோங்கமலரும், உயர்ந்த சண்பகமலருமாகிய கோட்டுப் பூக்களையும், நீரிலே பொருந்தியபூக்களையும், கொடியிலே பொருந்திய பூக்களையும் எடுத்துக்கொண்டுவந்து சிவபெருமானுடைய திருவடிகளைச் சிவாகம விதிப்படி பூசித்து எண்ணிறந்த காலமிருந்தார் பாலமுனிவர். நல்லபிதாவாகியமத்தியந்தின முனிவர் தம்முடைய பிள்ளை புலிக்காலையும், புலிக்கையையும் அவைகளிலே நீண்ட கண்களையும் பெற்றமையைக்காண விரும்பித்தில்லைவனத்தை யடைந்தளவில் அக்குமாரர் மனமகிழ்ந்து

தம்மெதிர்வந்து நமஸ்கரிக்கத் தாமவருடையவிளங்காநின்ற திருமேனியின் மெய்ம்மையைக் கண்டு மகிழ்ந்து அப்பொழு தே குளிர்மையாகிய பொற்றாமரை மலர்களையுடைய சிவக ங்கையிலே ஸ்நாநஞ்செய்து திருமூலத்தானமுடைய தம்பி ரானைப் பூசித்துக் கருணைதங்கிய திருப்புலீச்சரத்தைப் பொருந்திய சிவலிங்கப் பெருமானையும் பூசைசெய்யும் பயி ற்சிமிக அவ்வியாக்கிர பாதமுனிவருடைய பர்ணசாலையிலி ருந்து அவர்மேல் அன்புகொண்டு ஒருநாளிலே நல்ல குண த்தினுன்மிக்க பிதாவாகிய மத்தியந்தினமுனிவர், நான் பெ றுதற்கரிய புதல்வனே! நம்முடைய சந்ததி தழைத்தோங் கப் பொருந்தினுயாயின் இனி இல்லறத்தின் பகுதியை அடையக்கடவாய். பிதிரர்பொருட்டு ஓமம், பிண்டதானம், தருப்பண முதலியவைகளைக் கைம்மறித்துச் செய்வானாகிய புத்திரனையுடையவனே பெரிய சுவர்க்கத்தையடைவான்; முன்னே உரிமையாக உன்னைநான் பெற்றாற்போல ஒரு புத் திரனை நீ பெறும்படி என்வாக்கைத் தள்ளாது கொள்ளக்க டவாய் என்று சொல்லி உடன்படுத்திக்கொண்டு வசிட்ட முனிவருடைய கற்புமிக்க தங்கையை நிலைபெற்ற விவாக விதிப்படி அவ்வியாக்கிரபாத முனிவருக்கு மனைவியாகிக் கூடியிருக்கும்படி செய்தார்.

பின்பு அத்தேவியார் நிலைபெற்ற உபமன்னிய பகவா னைப்பெற அங்கேவந்த அருந்ததியார் அவனைத்தம்முடைய ஆச்சிரமத்துக்குக் கொண்டுபோய் இன்பத்தைத் தருங் காம தேனுவினது பொழிந்தபாலையூட்டி அழகுமிக வளர்க்குநாளி

லே வியாக்கிரபாத முனிவரும், தேவியாருமாகிய இவர்கள் புத்திரவாஞ்சையினாலே அவனைத் தங்கள் பர்ணசாலையிலே பொருந்தக்கொண்டு வரச்செய்து மனமகிழ்ந்து புசிப்பாயாக வென்று கொடுத்த இவர்கள் முன்னே உண்டுபழகிய தன்மைபொருந்திய சிறிய பல்லுக்கிசைந்த பதார்த்தங்களையும், முன்னே தாம் உண்டறிந்த பால்போலச்சேர்த்த திரவியங்களையும் அவ்வுபமன்னிய பகவான் புசியாதுஉமிழ்ந்துபோடுவாராயினாருமன்றி வாசனைமிக்க காமதேனுவின் பாலைப் பெறும்படி அழவே, வியாக்கிரபாத மகாமுனிவர் நாங்களோவறியோம், இனிதாகிய உணவை யறியோம் அவைகளையுடையவர் இவரேகாண் என்று எல்லாச் செல்வமுமுடைய சிவலிங்கப்பெருமான் சந்நிதியிலே வளர்த்திவிட ஆதார பதுமதளங்களின்மேலே சுவாலிக்கின்ற வெவ்விய உதராக்கினி பொருந்துதலினாலே அவமிருத்து கருமமே புகலிடமென்று வருந்தி யழுது அக்கணத்திற்றானே சிவபெருமானால் அலையாகின்ற நிறைந்த திருப்பாற் கடலைப்பெற்று அதனைப் பருகி சுவைகண்டு களிகூர்வாராயினார்.

குணமிக்க வியாக்கிரபாத மகா முனிவர் தம்மை ஆண்டருளும் சிவலிங்கப பெருமானுடைய சந்நிதியிலேஒருநாள் மனத்திலே பொருந்த விளைந்த அனுபவ ஞானத்தினாலே பார்த்தவிடத்து ஞேயமாகிய சிவத்தோடு கலந்து இன்பமனுபவிக்கும் நெறியிலே அழகுநிறைந்த தேவதாருவனத்திலே சிவபெருமான் தம்மையறியாதவர்களாகிய நாற்பத்தெண்ணுபிர மகாமுனிவர்களுக்கு மோகத்தைத் தவிர்த்து ஒரு

நாள் அருளினாலே திருநிருத்தஞ் செய்தருளினர் என்று சிறிதறிவினாலேகண்டு சோகித்து, ஐயோ என்று நொந்து தளர்கின்றவராய் எம்முடைய பிதாவாகிய சிவபெருமான் நல்ல திருமேனிகொண்டு வெளியே நின்று திருநிருத்தஞ் செய்தருளிய தேவதாரு வனமே நமது சிவபூசைக்குத் தான மாக நாம் முன்னே பொருந்தாதபடி தந்தையாராகிய மத்தி யந்தின முனிவர் இந்தத் திருமூலத்தானத்தை அடையும் வண்ணங் கற்பித்தருளினர். நன்மையாகிய அச்சிவபெருமா னுடைய அழகுபொருந்திய அருள் வடிவை நாம் அறியத்த குமோ; நமது நெஞ்சத்தின்கண்ணே மிக்க அன்பில்லை இஃ தென்னே சிவபெருமான் ஒப்பில்லாத உமாதேவியாரோடும் எப்படிஎழுந்தருளிவந்து திருநிருத்தம் தரிசிப்பித்தருளுவர் என்று சோகித்து உலகத்துக்குப் பிதாவும், தத்துவங்களைக் கடந்தவருமாகிய சிவபெருமான் அனவரத தாண்டவத்திலே திருவுளம் பொருந்தப்பெற்ற மன்றம், அம்பலம் என்பன முதலான அழகுநிறைந்த சபையின் பெயர்களை வேதநூல் கள் இடையறாது நின்று எக்காலமுஞ்சொல்லும். இன்னும் இச்சபையினது உண்மை இங்ஙனமென்று யாவர் அறியு மவர். முற்காலத்திலே அந்த நிருத்தராசருடைய திருநிலை யைத் தரிசித்தவர்கள் உண்டென்று இன்றைக்கும் அறி கின்றோம். ஆதலினால் இச்சிதம்பரமே திருநிருத்தந் தரிசி க்கும்படி தந்தருளுமென்று வியாக்கிரபாத மகாமுனிவர் திருவருளினால் அன்பு வளராநின்ற மனந்தெளிந்தார்.

## இதற்றுச் செய்யுட்கள்.

மன்னுமருந்தபோதனரின்மருவியமத்தியந்தினனு
முன்னரியதிருமுனிபாலோங்குலகந்துயர்நீங்கப்
பன்னரியசிவஞானம்பத்திதரும்பான்மைதகத்
தன்னிகரிற்றிருவருளாலவதரித்தானொருதனயன். (க)

தனிப்புதல்வன்றனையணைத்துத்தகவுச்சிமோந்துசடங்
கனைத்துமடைவினியற்றியருமறைநூலவைகொடுத்து
மனத்துணையாந்திருநாமமருவுநெறியுபதேசித் [னிவன்.
தினிச்செயவேண்டுவதென்கொலெனமொழிந்தானெழில்மு

இந்தவகைசிவனருளாலிரவியெதிர்மணியுமிழ
வந்தவனலெனவிளங்குமழமுனிவனடிவணங்கித்
தந்திரமுன்புகலுமருந்தவத்தொகையிற்றலையான
வந்தமின்மாதவமடியேற்கருளுகெனவுரைசெய்தான். (ங)

தவமெவையுமுணர்ந்தமுனிதனயன்முகமிகநோக்கிப்
புவனமலிபோகங்கள்பொருந்துமருந்தவம்புரிந்தார்
சிவகதியுமிதுவன்றுசிவார்ச்சனமார்ச்சனமாயிற்
பவமகலும்பரபோகம்பெறலாகுமெனப்பகர்ந்தான். (ச)

சொன்னமொழிகொண்டிறைவன்றோன்றிமகிழ்ந்துளதானம்
பன்னுகெனமழமுனிக்குப்பார்முழுதும்பரப்பிரம
சன்னிதியன்றெனக்காண்டறவக்குறைகாணென்றுனு
மன்னிடமாய்நிகழுமிடமுளதென்றான்மாமுனிவன். (ரு)

பாருயிர்கட்குபகரித்துப்பரப்பினடுப்பபடுவதொரு
மேருகிரியும்புடைசூழ்வெற்புமவற்றிடைநாடு
மாருயிர்கள்பயனருந்துமமருலகாமெனக்கழித்தான்
சீருலவுநாறுவளர்செறுவெனலாஞ்செறிமையுற. (சு)

எத்தகையபோகங்களெவற்றினுக்குங்காரணமா
வைத்தபடியிடம்போதாவகைநெருங்குமன்னுயிர்கண்
முத்திபெறத்திருவுள்ளமுகிழ்த்தபெருங்கருணையினு
லத்தனுமித்தலநண்ணியலகிலிடங்கைக்கொண்டான். (எ)

ஞாலத்தாயிரகோடிநற்றூனமுளவவற்றி
னேலத்தானலமாரவிடங்கொண்டவெழிற்றில்லை
மூலத்தானத்தொளியாய்முளைத்தெழுந்தசிவலிங்கக்
கோலத்தானின்பூசைகொள்வானென்றுணாசெய்து. (அ)

திருநீறுநுதல்சேர்த்தித்திகழுச்சிதனைமோந்தெங்
கருநீறுபடவுதித்தகாளையெனவணைத்துவிழி
தருநீர்மத்தியந்தினனுந்தந்தையவந்தனைசெய்து
வெருநீர்மையன்னையையுமடிபணிந்துவிடைகொண்டான்.()

வேறு.

மண்டானிடர்தீர்வகையா லருளால்வருவானிருளார்மக ராலயநீர், தண்டாரகைபோற்றரளம்புரளத்தள்ளுந்தடமாடு யர்தில்லைவனத், தண்டாதிபனுமமதேதுணையாவரியுங்கரியுந் திரியுஞ்சரியுங், கண்டானுலைழயாவுயர்கானமுமுன்காணுதன கண்டுகடந்தனனே. (கo)

KOVILOOR MADALAYAM
KOVILUR-630307
MANAGIRI VIA

மொழியும்மொழியும்பரிசொன்றிலதாமுன்னான்மறை
யோதமுழங்கியகான், வழியும்வழியுமதுவார்மதுவிவாசந்தக
வீசியவார்குவளைக், கழியுங்கழியும்படிவந்தலர்பொற்கமலங்
கண்மலங்களையுங்கயநீர், பொழியும்விழியும்மனமுங்குளிரப்
புதுமாமுனிகண்டுபுகழ்ந்தனனே. (கக)

சீரார்தருபொய்கைவணங்கியதன்றென்பான்மிகுமன்
பொடுசேர்சரியே, பேராவகைசெல்லவொராலநிழற்பிரியாத
பிரானெதிர்நேர்படமுற், பாராரவிழுந்துமெழுந்தும்விழிப்ப
யின்மாரிபொழிந்துமழிந்துமொழிந், தாராவமுதேயெனையா
ளுடையாயறிவேயெனவோதினனாரணமே. (கஉ)

முன்னாள்பதியாயினுமேதகுசீர்மூலப்பதியாளுடைமுக்
கணனே, பொன்னார்தருபொய்கையுடைப்புனிதாபொடிசே
ர்வடிவேமுடிவேயடியே, னென்னாதரவார்தருபூசைகொள்
வாயினியாய்முனியாதெனவோதிமடுப், பன்னாண்மலர்கொய்
ததின்மூழ்கியருட்பாதங்களணைந்துபணிந்தனனே. (கங)

தடமாமலர்கொண்டுவணங்கியருந்தாவாமுனிதில்லைவ
னச்சரியே, குடபாலணைவான்மணமாமலருங்குளமுங்கனை
யுந்தளமுங்குறுகித், திடமார்தருவேநிழலாவெழிலார்சிவலி
ங்கமிருத்தியருத்தியொடங், கிடமாகவிரண்டிடமும்பணிவு
ற்றிறையேதுணையாகவிருந்தமர்நாள். (கச)

காலம்பெறநீறணிமாமுனிநீர்கமழ்குண்டிகைதண்டுகர
ண்டிகையுட், சாலும்பலபோதுசமித்தொளிர்புற்சாகாதிபலா

சிலைதாமிகமே,ஞலுஞ்சடையெட்டுமுடித்தொருநாணண்ணி
த்திகழர்ச்சனைபுண்ணமருப், பாலொன்றலராய்பொழுதேப
ழுதார்பல்மாமலர்கண்டுபகர்ந்தயர்வான். (கரு)

வண்டுதேம்விடிந்தெனிலல்லெனிமேலோர்வழியுந்தெரியா
துமரங்கண்மிகக், கண்டீரவளர்ந்துகரஞ்சரணங்காலும்பனி
யால்வழுவுங்கழிதே, னுண்டூறுபடுத்தியசெம்மனல்வீயொத்
தேறுமரும்புவிரும்பலனாப், பண்டுரொடெரித்தபரம்பொரு
ளார்பழுதென்றனவொன்றுபகர்ந்தயர்வான். (கசு)

தண்ணார்மதிசூடுசடாமகுடத்தலைவாகடைவாழ்வுதவிர்
ப்பவனே, கண்ணார்நுதலோயொருமான்மறிசேர்கரவாவரவா
கருமூலகரா,மண்ணார்புகழ்தில்லைவனம்பிரியாமணியேயெனை
யாளமகிழ்ந்தனையே, லெண்ணாதுநினைந்தவைதந்தருண்மற்
றின்பார்தருமன்பிலனென்றயர்வான். (கஎ)

அன்பூடுருகப்பணிவாரிலரோலருளாயெனும்வாய்மைய
றிந்தும்விடா, வென்பூசையுநேசமும்யானுமுனக்கெங்கேயெ
னநொந்தயர்வானெதிரோ, வன்பூதமிகப்புடைசூழ்விடைமே
ன்மதிசூழ்சடைவானவர்கோன்வரநேர், முன்பூதலமீதுபணி
ந்திருகண்முகமார்புனலாடினன்மாமுனியே. (கஅ)

ஆலந்தருவானமுதாமொழியாலருமாமுனியர்ச்சனையி
ச்சையினின், சீலந்திகழ்வாய்மைமகிழ்ந்தனநீசிந்தித்தவரம்
பலசெப்பெனவென், காலுங்கரமும்புலியின்மலியக்கண்ணங்
வைதங்கவிரங்கிமுதற், கோலந்திகழ்பூசைகொளென்றுவர
ங்கொண்டானவையெய்தைகொடுத்தனனே. (ககூ)

விண்ணுடருநாடருமேலவனே விரவாவரமுந்தருவானெனநற், கண்ணுறுமரும்புபெரும்புனன்மெய்க்காலாறெனவாறருகாதன்மையான், மண்ணூரவணங்கவணங்குடனேமறைவானிறைவான்வழிமேவியபின், பண்ணூரவியாக்கிரபாதனெனும்பாவார்பெயரோதினபாரிடமே. (உ0)

அறுகாலெழுகால்பிறகாமடுவுற்றமையாநியதிச்சமைவாதரியா, மலறகாதலினாலறைவானறவார்மந்தாரவரும்புசெருந்திகுரா, நிறைபாதிரிகோங்குயர்சண்பகமேநீர்வாழ்மலர்வல்லிகொணீண்மலர்கொண், டிறையானடியேமுறையால்வழிபட்டெண்ணூர்தருகாலமிருந்தனனே. (உக)

நற்றந்தைபுலிச்சரணங்கரநீணயனங்கள்பரித்தமைகாணநயந்துற், றங்கெதிர்சென்றுவணங்கமகிழ்ந்தொளிர்மேனியின்வாய்மையுவந்துடனே, பொற்றண்மலர்வாவிபடிந்திறையப்பூசித்தருண்மேவுபுலீச்சரமும், பற்றும்பெருமானையுமர்ச்சனைசெய்பயில்வாரவிருந்துபரிந்தொருநாள். (உஉ)

நற்பான்மிகுதந்தையரும்புதல்வாநஞ்சந்ததியுய்ந்திடநண்ணினையே, விற்பாலினியாகுதியாதிமறித்திடுவானுடையானெடுவானடைவான், முற்பானுனையானெனநீபெறுமாமுனியாதுகொளென்றுவசிட்டமுனிக், கற்பார்தருபின்னியைமன்னுமணக்கடனாலுடனாநெறிகண்டனனே. (உங)

பின்பக்கொடிமன்னுபமன்னியனைப்பெறவந்தவருந்ததிகொண்டுபெயர்ந், தின்பச்சுரபிப்பொழிபானுகர்வித்தெழிலா

ரவளர்த்திடுநாளிவர்தா, மன்பிற்புணரக்கொணர்வித்துமகிழ்ந் தயிலென்றிடுமுன்பயிலும்படிசேர், புன்பற்கமர்பண்டமுமு ண்டறிபால்போலுய்த்தனவும்புகழாதிகழ்வான். (உச)

மணமேதகுபால்பெறுமாறழமாமகனூர்முனியாம்வறி யோமறியோ, முணவேயினிதாமவைதாமிவர்காணுடையா ரெவ்வாழ்வுடையானெதிரோ, துணர்மேலெழுவெங்கனறங்கி நடுத்துஞ்சுந்தொழிறஞ்செனநஞ்சமுதக், கணமேயிறையா னிறையாலலையுங்கடல்பெற்றதுகண்டுகளித்திடுவான். (உரு)

ஆளும்பெருமானெதிரங்கொருநாளலர்பங்கயவாதனமா யமரத், தாளொன்றுதலஞ்சகனந்தவிரச்சடரந்தொடர்மார் பெதிர்தள்ளவிழத், தோளங்கைபொரக்களமேனிமிரச்சுரிதந் தநிநாப்பிரிவந்தரநா, வாளொன்றுவிழிக்கடைதுண்டம்வி டாவண்ணந்தருதிண்ணியமாமுனியே. (உசு)

சீரார்சிவயோகமகம்புணரச்செறியின்புணரக்குறியின்பு றுமா, றோரார்தருதாருவனத்திடையாறெண்ணுயிரமாமுனி வர்க்கிறைவ, னோராதவர்மோகமொழித்தருளாலொருநாண டமாடலுகந்தனனென், றூராவுணர்வாலறிவுற்றயராவந்தோ வெனநொந்தயர்கின்றனனே. (உஎ)

நன்மேனிகொடெந்தைபிரான்வெளியேநடமாடியநாடி டமாயிடநா, முன்னேயமராவகைமாமுனிவன்மூலப்பதிசேர மொழிந்தனனற், றன்னேருறுதாளருணுமுணரத்தகுமோ மிகுமன்பகமோவிலதா, லென்னேபெருமானொருமானுடன் வந்தெங்கேபாதந்தருமென்றயர்வான். (உஅ)

அத்தன்பரதத்துவனித்தநடத்தமரும்பொதுவின்பெயர் மன்றமலஞ், சத்தும்பரிரண்மயகோசமகத்தனிபுண்டரிகங் குகைவண்ககனஞ், சுத்தம்பரமற்புதமெய்ப்பதமச்சுழுனுவ் ழிஞானசுகோதயநற், சித்தம்பரமுத்திபரப்பிரமந்திகழுஞ் சபைசத்திசிவாலயமே. (உகூ)

என்றின்னமனேகமனேகமெடாவேரார்பொதுவின்பே ராரணநூ, னின்றென்றுமியம்பிடுமின்னுமிதினேரோயெனவி ங்காரேயறிவா, ரன்றங்நிலயத்தலைவன்னிலைகண்டவருண்டெ னவின்றுணர்கின்றனமான், மன்றந்தெரியத்தருமென்றரு ளால்வளர்சின்னைதமெளிந்தனன்மாமுனியே. (௩௦)

வியாக்கிரபாதச்சருக்கம் முற்றிற்று.

---

## பதஞ்சலிச்சருக்கத்திலுள்ளது.

ஆதிசேஷபகவானுனவர் விஷ்ணுவினிடத்தில் ஆக்ஞை பெற்றுக்கொண்டு ஆநந்த நடனதரிசனத்தின்பொருட்டுச் சிவபிரானைக்குறித்துத் தபசுசெய்து சிவபெருமான் திருவருள்பெற்று ஸ்ரீ-சிதம்பர ஸ்தலத்துக்கு வந்தபோது வியாக்கிரபாதமுனிவனைக் கண்டு, பரஸ்பரம் முகமனுரையாடிப் பதஞ்சலி பகவானுனவர் சிவகங்கையில் ஸ்நாநஞ்செய்து வியாக்கிரபாதமுனிவருடன் சச்சிதாநந்தகனமாய் விளங்காநின்ற திருமூலட்டானேசுரருடைய திருவடிகளைப் பூசித்துப் பிரதட்சணஞ்செய்துகொண்டு மேற்குப்பக்கத்திலுள்ள தெய்வத் தன்மை பொருந்திய வாவியில் ஸ்நாநஞ்செய்து

திருப்புலீச்சரரையும் வணங்கி அவ்விடத்துள்ள வியாக்கிர பாதருடைய பர்ணசாலையில் சாகமூலபலங்களும் அருந்தி வசித்திருந்தார் என்று கூறப்பட்டிருக்கிறது.

இதற்குச் செய்யுட்கள்.

திண்ணமார்சிறியோன்பெற்றசெல்வமாமென்னஞானக்
கண்ணினுலமலன்கூத்துக்கண்டுளங்களித்தான்போல
வெண்ணிலாவின்பமுற்றங்கிலங்குபொற்கயத்துமூழ்கப்
பண்ணிநாண்மலரான்மூலப்பரமர்தாள்பணியவுய்த்தான். ()

வலங்கொண்டுகுடபாற்றெய்வவாவியின்மூழ்குவித்து
நலங்கிளர்தன்னையாண்டநாதனைவணங்கல்கித்
தலம்புணர்பன்னசாலைதகுவித்துச்சாகமூல
பலங்களுமிலங்கப்பின்னுட்பரிந்தருவிருந்தளித்தான். (௬௪)

இரண்யவன்மச்சருக்கத்தில்,

சிங்கவருமன் தன் உடற் குற்றத்தால் அரசாட்சிசெய்ய மனமில்லாமல் தவஞ்செய்யுங் கருத்தினனாய் இராச்சியத்தைவிட்டு நீங்கி ஸ்ரீ-சிதம்பர க்ஷேத்திரத்தை யடைந்து வியாக்கிரபாதரைத் தரிசித்தபோது வியாக்கிரபாதமுனிவர் ஸ்ரீ-நடராஜப்பெருமானது ஆக்ஞையால் சிவகங்கையில் ஸ்நாநஞ்செய்விக்க உடனே, உடல் குற்றநீங்கிச் சரீரமானது சுவர்ணமயமாய் விளங்கவே அக்காரணத்தினால் இரண்யவன்மன் என்னும் நாமத்தைப்பெற்று வியாக்கிரபாதமுனிவருடன் சிவபெருமானுடைய ஆநந்தத் தாண்டவ தரிசனஞ்செ

ய்து ஸ்துதித்து, ஸ்ரீ-மூலட்டானேசுரரையுந் தரிசனஞ்செய்து திருப்புலீச்சரத்தில் வந்து திருப்புலீச்சுரரையுந் தரிசனஞ் செய்துகொண்டு அவ்வியாக்கிரபாதருடைய ஆச்சிரமத்தில் வசித்திருந்ததாகக் கூறப்பட்டிருக்கிறது.

இதற்குச் செய்யுள்.

இரணியவன்மனாமுன்னிறைஞ்சியதிங்கையீங்காற்
றிருநடங்காணப்பெற்றோமென்றவன்றனக்குச்செப்பி
மருமலர்தூவுவித்துவளர்புலீச்சுரத்துமன்னு
மொருவனதிருதாள்போற்றியுறவுறவிறைஞ்சுவித்தான். ()

## ஷ சருக்கத்திலுள்ளது.



சிங்கவருமாவினதுபிதாவாகிய மனுவானவர் சுவர்க்கத்தையடைந்த பின்னர் வசிட்டமுனிவர் சிங்கவருமனை அரசனுக்கத் தேடிக்கொண்டு ஸ்ரீ-சிதம்பரம் வந்தகாலத்தில் சிவகங்கையில் ஸ்நானஞ்செய்து ஸ்ரீ-நடராஜப்பெருமானைத் தரிசித்து வணங்கி ஸ்ரீ-திருமூலட்டானரையும் பூசித்து வணங்கித் திருப்புலீச்சுரரையும் பூசித்து வணங்கி வியாக்கிரபாதருடைய ஆச்சிரமத்தில் விருந்துண்டுவசித்திருந்தார் என்று கூறப்பட்டிருக்கிறது.

இதற்குச்செய்யுட்கள்.

தில்லையெல்லைபுகுந்திவன்பெறுசீர்கொணீடருள்கூறிலோ
ரொல்லையில்லைவசிட்டநீயுமிறைஞ்சவெய்துகவென்றுநற்
றொல்லைமல்லலிலஞ்சிமேவுதொழுந்தகைப்புனலாடுவித்
தொல்லைமல்கியமன்றவாய்மையுணர்த்திமுன்பணிவித்தனன்.

கரவிலாடல்வணங்கிவண்கருமூலகாரணனாரணப்
பொருவில்பாதமிறைஞ்சிநீடுபுலீச்சரந்தொழுதெங்கணும்
பரவிநீடுவசிட்டமாமுனிபாய்புலிச்சரணத்தன்வாழ்
விரவுமாச்சிரமத்தின்மேவிவிருந்தருந்தியிருந்தனன். (க௦௦)

சிதம்பரபுராணந்தீர்த்தச்சருக்கத்திலுள்ளது.

சிற்சபையின் மேல்பக்கத்தில் வியாக்கிரபாதமுனிவர் பூஜிக்கும் புலீச்சுர சந்நிதானத்திற்கு முன்னர் வியாக்கிரபாத தீர்த்தம் என்னும் நாமம்பெற்று நாலாவதானதீர்த்தமாக விளங்கப்பெற்றிருக்கிறது.

இதற்குச்செய்யுட்கள்.

குழைபொலிஞானச்செந்தேன்குனிக்குமம்பலத்துமேல்
பான், மழமுனிபூசைசெய்யும்வளர்புலீச்சரத்துமுன்னர், வி
ழைவுறவுளதின்பேர்வியாக்கிரபாததீர்த்த, மழகுறவதனை
வானோர்சேவைசெய்தகலாதொன்றும். (கச)

வெய்யவன்சிறந்தவாரம்விதிபாதயோகந்துத்திப்
பையராத்திங்கடன்னைப்பருதியைவிழுங்குங்கால
மொய்யலரத்தீர்த்தத்தின்மூழ்கித்தம்வகைக்கிடான
செய்யதானங்கள்செய்தோர்தீவினைமுழுதுந்தீர்வார். (கரு)

கன்னிஞாயிற்றின்வானக்கறைமதிகுறைபக்கத்து
மன்னுமட்டமியின்மூழ்கித்தானமும்வழங்கியங்கன்
முன்னவற்பணியினேய்சணாதினாமூப்பகாலங்
துன்னிறப்பொழியுநாலாஞ்சொற்றகுதீர்த்தமீதால். (கசா)

## ஷை சமாதிச்சருக்கத்திலுள்ளது

என்னென்றிங்குரைசெய்கேன் சயிமினிவவந்தோவெவ் வுலகத்துள்ளுஞ், சொன்னின்றபெரியவர்க்குட்புலிப்பதனே மிகப்பெரியோன்சுருதியேத்தும், பொன்னின்றசிதம்பரமன் னவன்பெயராற்பெரும்பற்றப்புலியூரென்று, மன்னின்றதெ ன்றுலங்கவினெனதுதேசிகனும்வாழ்வுமாவான். (உக)

(இதன்பொருள்.) இப்புதுமையை என்னென்றுசொ ல்வேன் சயிமினியே, ஆச்சரியம் எந்தலோகங்களினும் மகா மகிமையைப்பெற்ற மேலோர்களில் வியாக்கிரபாதமகாமுனி யே மிகுந்த மகிமையைப்பெற்றவன்; அஃதெங்ஙனமெனின் வேதங்களெல்லாம் புகழும் மேன்மையும், இலட்சுமிகர மும் பொருந்திய சிதம்பரம் அவன் பெயர்பெற்றப் பெரும் பற்றப்புலியூரென்று எந்நாளும் விளங்கச் செய்ததனலே அவ்வியாக்கிரபாதமுனியே என் குருவும் என் செல்வமும் ஆவான்.—என்றவாறு.

மற்றையமைந்தர்ப்பேறுமொருபேறு வீங்கிவனைவயிற் றின்வாய்த்த, பொற்றொடியாடானன்றேநற்புதல்வர்ப்பேறு ற்றுள்புகல்வதென்யா, னற்றவமாதவன்பாதத்துகளெனது தலைமீதேநயந்துநேசந், துற்றவடன்றிருத்தாளென்கருத்தா லுங்கரத்தாலுந்தொழுகின்றேனால். (உஉ)

(இ-ள்.) அன்னவனையன்றி இதரமான பிள்ளைகளினு டைய பெருமையை ஒருபெருமையென்று சொல்லலாமோ

இங்ஙனம் இவனை வயிற்றிலிடங்கொடுத்த புண்ணியவதியாகிய மத்யந்த மகாரிஷியின் பாரியாளாகிய பாக்கியவதியல்லவோ சுபுத்திரபாக்கியப்பேறடைந்தவள் அந்த அம்மனுடைய தவப்பலனை என் சொல்வேன் யான்? ஆதலால் அவ்வியாக்கிரபாதர் பிதாவாகிய மாதவத்தோனது சரணாரவிந்தத்தூளி என்சிரமிசையணிந்துநனிகாதலோடு அவ்வனையினுடைய பாததாமரைகளை என் மனத்தினாலும், கரங்களினாலும் பணிதல் செய்வேன்—எ-று.

பிள்ளையாவதுமவனேயாமவனைப்பெறுதற்குப்பெருகுகாதல், வள்ளைவார்குழையன்னையெத்துணைமாதவஞ்செய்துவருந்தினளோ, கொள்ளைமாதவப்பேற்றிலெந்தமாதவப்பேறுகோத்ததோவான், வெள்ளைவாண்மதிவேணியமலனுயர்திருவருளோவிரிக்கற்பாற்றே. (உரு)

(இ-ள்.) பிள்ளையென்றால் அந்தவியாக்கிரபாதரே பிள்ளை; அந்தப்பிள்ளையைப்பெறுதற்கு மிகுந்தவாசைகொண்டு வள்ளைத்தண்டுக்கிணையாகிய காதில் குண்டலங்களையணிந்ததாய் எவ்வெவ்விதங்களாகிய பெரிய விரதங்கள், தவங்கள் செய்து வருந்தமுற்றாளோ, செய்த அநேகங்கோடி மகா தவங்களில் எம்மாதவத்தின்பலன் இவரைப் பிள்ளையாய்க்கொடுத்ததோ, ஆகாசத்தில் விளங்கும் வெண்மையாகிய சந்திரனைச் சடாமகுடத்திலணிந்த பரமசிவனுடைய அனுக்கிரகமோயாதோ இன்னதென்று சொல்லிமுடியுமோஎன்று வாதராயணர் அதிசயித்தார்—எ-று.

இருவருணர்ந்தறிவரியபரமசிவனணிமன்றினிடத்து
வெற்பின், றிருமகிழநடிக்குநடமுன்கண்ணுற்கண்டருளின்
செல்வத்தோங்கிப், பொருவரியபயனடைந்தவியாக்கிரபாத
ன்றன்னைப்போலவண்டத், தொருவருளரொன்றுரைக்கவெ
வருளரோமாதவத்தாலுயர்வுபெற்றேய். (உச)

(இ-ள்.) அரி, பிரமர்களாலுந் தெரிதற்கரிதாகிய மகா
தேவனது சகல அலங்காரமும் பெற்ற கனக சபையில் மலை
யரையன் மகளாகிய சிவகாம சௌந்தரி கண்டு ஆநந்தம்
பெற நடனஞ்செய்யும் விநோதத்தைப் பிரசன்னமாக ஞா
னக்கண்ணினலும்,இரண்டு நயனங்களினலும் தரிசனஞ்செ
ய்து சிவாநுக்கிரகமென்று மேலான வாழ்வுபெற்றுத் தன்
னேரில்லாதபலனைப்பெற்ற வியாக்கிரபாத மகாமுனிவனைப்
போல மகிமைபெற்றவர் பிரமாண்டத்துக்குள்ளாக வேறொ
ருவருண்டென்று சொல்லக்கிடையாதென்று மகாதவங்களி
னல் மேன்மைபெற்ற சயிமினியைப் பார்த்து வியாசர் புக
ழ்ந்தார்—எ-று.

ஆற்றரியதவம்புரிந்தத்தலந்தன்னின்புலிப்பாதத்தனக
ன்மன்றிற், றூற்றருநாடகங்கண்டுவாழ்ந்துதனதொல்குல
த்தைத்தூயமுத்தி, யேற்றினனங்கதுவின்றித்திருமூலத்தா
னத்துளிமையோர்நாதன், போற்றரியதிருவருளாலொருபு
தல்வன்றனையுலகம்புகழப்பெற்றான். (உரு)

(இ-ள்.) அந்தச்சிதம்பரதலத்தில் எவர்களாலுஞ் செய்
தற்கரிய மகா தவங்கள் செய்த புண்ணிய மூர்த்தியாகிய

8386
R65:31

வியாக்கிரபாத முனிவர் திருச்சிற்றம்பலத்தில் எவர்களாலு ங்காண்டற்கரிய ஞானநந்த நடனத்தைத் தருசினம்செய்து மேன்மை பொருந்திய செல்வத்தையுற்றுத் தம்குலத்திலு ண்டானவர்களையெல்லாம் பரிசுத்தமான சிவபதவியிற்சேர் த்ததுமல்லாமல் திருமூலத்தானத்தில் தேவர்களுக்கு நாயக னை மகாலிங்கத்தை அரிய பூஜை செய்து அவர்கருணையி னால் உலகங்களெல்லாந்துதிக்கும்படியான ஒருபிள்ளையைப் பெற்றார்.—எ-று.

அறுபத்துமூன்று நாயன்மார்களுள். "திருநீலகண்ட நாயனார்," "கணம்புல்லநாயனார்" இவ்விருவரும் இந்தப் புலீச்சரத்தில் சிவபெருமான் அருள்பெற்று முத்தியடை ந்ததாகப் பெரியபுராணத்திற் கூறியிருத்தல் அடியில் வரு மாறு:—

## திருநீலகண்டநாயனார்.

ஸ்ரீ-சிதம்பரத்தில் குயவர் குலத்தில் பொய் சொல்லல் சிறிதுமின்றித் தருமநெறியில் வாழ்பவரும், இல்லறத்திலே நிற்பவரும், சிவபக்தி, அடியார் பக்திகளிற் சிறந்தவருமாகிய தொண்டர் ஒருவரிருந்தார்; அவர் தம்முடைய குலத்திற் கேற்ப மட்கலங்களை வனைந்து விற்றுச் சீவனஞ் செய்தும் திருவோடுகளைச் சிவனடியார்களுக்குக் கொடுத்தும் வந் தார். பரமசிவன் திருப்பாற்கடலில் எழுந்த ஆலகால விஷ த்தை உண்டு தமது அடியார்களுக்கு இடையூறு நேரிடில் அதை நீக்குவாம் என்பதற்கு அறிகுறியாகக் கண்டத்தில் தரித்துக்கொண்ட கருணையை நினைந்து அக்கடவுளுடைய

கண்டத்தைத் திருநீலகண்டமென்று எப்போதுஞ் சிறப்பித்துச் சொல்லுவார்; அதனால் அவருக்குத் "திருநீலகண்டர்" என்னும் பெயர் வந்தது.

ஒருநாள் அவர் அவ்வூரில் ஓர் வேசியிடத்திற் சென்று வீட்டுக்குத் திரும்பக் கற்பின்மேல சிறந்த அவர் மனைவியார் அதையறிந்து அதற்குத் தம்முடைய மனதிலே தோன்றிய கோபத்தையடக்கிக்கொண்டு இல்வாழ்க்கைக்குரிய மற்றைப் பணிகளெல்லாஞ் செய்தும் புணர்ச்சிக்கு மாத்திரம் இசையாதவரானார். நாயகர் அநேகவிதத்திற் சொல்லியுஞ் சமாதானமாகாமல் எம்மைத் தீண்டுவீராகில் திருநீலகண்டமென்று ஆணையிட்டார். அதுகேட்ட நாயகர் எம்மை என்ற பன்மையால் அம்மனைவியைத் தீண்டாததுமன்றி மற்றைப் பெண்களையுந் தீண்டாதொழித்துப் பிறரறியாதபடி வாழ்ந்தார். இவ்விதம் எவ்வனம் நீங்கி வயோதியர்களாகி வருத்தமுற்றார்கள்; அங்ஙனம் வருத்தமுற்றும் சிவபக்தியில் சிறிதுங் குறையாதவர்களாக விருக்குங் காலத்தில் காருண்ணிய சொரூபராகிய பரமசிவன் ஒரு சிவயோகி வடிவங்கொண்டு அவர் வீட்டுக்குச் சென்று அவரால் வணங்கப்பெற்று இந்தத் திருவோட்டை வைத்திருந்து நாம் கேட்டபோது கொடுப்பீராக வென்று சொல்லி ஒரு ஓட்டைக் கொடுத்துப் போயினர். நெடுநாட்கழிந்த பின்னர் ஒருநாள் பரமசிவன் தாம் வைக்கக்கொடுத்த திருவோட்டை மறையச்செய்து முன்போலச் சிவயோகி வடிவந் தரித்து மீண்டும் வந்து கேட்டனர். நாயனர் அவ்வோடு வைத்தவிடத்தில் காணமை

யால் தேவரீர் தந்த ஓட்டைக் கண்டிலேன். புதியஓடு தரு கின்றேன், அடியேன் பிழையை மன்னித்தருளவேணுமென்று பிரார்த்தித்தார். சிவயோகியார் கோபித்துத் தில்லைவாழந்தணர்களிடம் அவ்வழக்குத்தீர்க்கவேண்டித்திருநீலகண்டநாயனாரை அழைத்துக்கொண்டு சென்று அவர்களிடம் தம் வழக்கைக்கூறி நாம் கொடுத்த ஓடு மறைந்துபோனமை உண்மையாயின் தன் மனைவியின் கையைப் பிடித்துக் குளத்தில் மூழ்கிச் சத்தியஞ் செய்யும்படி கேட்டு அவர்கள் மறைத்து வந்த யாவர்க்கும் அரிதாகியநிலையை வெளிப்படுத்தித் திருப்புலீச்சர சந்நிதானத்திலுள்ள திருக்குளத்தில் தன் மனையாளோடு ஒரு மூங்கிற்றண்டைப் பிடித்து மூழ்கச்செய்தார். அங்ஙனம் மூழ்கியெழவே அக்கிழத்தம்பதி இருவரும் எவ்வனமுடையர்களாய் விளங்கினர். கண்டவர்கள் அதிஆச்சரியமடைந்தார்கள். தேவர்கள் புஷ்பவருஷம் வருஷித்தார்கள். சிவயோகியார் மறைந்து ஆகாயத்தில் ரிஷபாரூடராய் உமாதேவியாருடன் காட்சி கொடுத்தருளினர்.

மனைவியார்தம்மைக்கொண்டுமறைச்சிவயோகியார்முன்
சினவிடைப்பாகர்மேவுந்திருப்புலீச்சரத்துமுன்னர்
நனைமலர்ச்சோலைவாவிநண்ணித்தம்முண்மைகாப்பார்
புனைமணிவேணுத்தண்டினிருதலைபிடித்துப்புக்கார். (௩எ)

தண்டிருதலையும்பற்றிப்புகுமவர்தம்மைநோக்கி
வெண்டிருநீற்றுமுண்டவேதியர்மாதைத்தீண்டிக்
கொண்டுடன்மூழ்கியென்னக்கூடாமைபாரோர்கேட்கப்
பண்டுதன்செய்கைசொல்லிமூழ்கினர்பழுதிலாதார். (௩அ)

வாவியின்மூழ்கியேறுங்கணவருமனைவியாரு
மேவியமூப்புநீங்கிவிருப்புறுமிளமைபெற்றுத்
தேவருமுனிவர்தாமுஞ்சிறப்பொடுபொழியுந்தெய்வப்
பூவின்மாமழையின்மீளமூழ்குவார்போன்றுதோன்ற. (௩௯)

அந்நிலையவரைக்காணுமதிசயங்கண்டாரொல்லா
முன்னிலைநின்றவேதமுதல்வரைக்கண்டாரில்லை
யிந்நிலையிருந்தவண்ணமென்னெனமருண்டுநின்றார்
துன்னியவிசும்பினூடுதுணையுடன்விடைமேற்கண்டார் (௪0)

கணம்புல்லநாயனர்.

வடவெள்ளாற்றுத் தென்கரையில் இருக்குவேளூரில் சிவபக்தியிற் சிறந்த பெருஞ் செல்வராகிய ஒருவர் இருந்தார்; அவர் செல்வத்தாலடையும் பயன் இதுவே யென்று சிவாலயத்தினுள்ளே திருவிளக்கேற்றித் தோத்திரம்பண்ணுவாராயினர். நெடுங்காலஞ் சென்றதன் பின் வறுமை யெய்திச் சிதம்பரத்தை யடைந்து சபாநாயகரைத் தரிசனஞ் செய்துகொண்டு தம்முடைய வீட்டிலுள்ள பொருள்களை விற்று அங்குள்ள திருப்புலீச்சரமென்னும் ஆலயத்திலே திருவிளக்கேற்றி வந்தனர். இப்படி ஒழுகு நாளிலே வீட்டுப் பொருள்களும் ஒழிந்துவிடக் கணம்புல்லுக்களை அரிந்து கொண்டு வந்து விற்று நெய் வாங்கித் திருவிளக்கெரித்தார். அதனல் அவருக்குக் "கணம்புல்லநாயனர்" என்னும் பெயர் வந்தது.

ஒருநாள் தாம் அரிந்துகொண்டு வந்த புல்லு விலைப்படாதொழியவும் தம்முடைய பணி தவறாமல் அப்புல்லையே மாட்டி விளக்கெரித்தார். முன்பு விளக்கெரிக்கும் யாமம் வரையும் எரித்தற்கு அப்புல்லுப் போதாமையின் அடுத்த விளக்கிலே தம்முடைய திருமுடியை மடுத்து எரித்தார், அப்பொழுது பரமசிவன் பெருங்கருணை செய்தருளக் கணம்புல்லநாயனார் சிவலோகத்தையடைந்தனர்.

தில்லைநகர்மணிமன்றுளாடுகின்றசேவடிக
ளல்கியவன்புடனிறைஞ்சியமர்கின்றார்புரமெரித்த
வில்லியார்திருப்புலீச்சரத்தின்கண்விளக்கெரிக்க
வில்லிடையுள்ளனமாறியெரித்துவருமந்நாளில். (௪)

ஆயசெயன்மாண்டதற்பினயலவர்பாலிரப்பஞ்சிக்
காயமுயற்சியிலரிந்தகணம்புல்லுக்கொடுவந்து
மேயவிலைக்குக்கொடுத்துவிலைப்பொருளானெய்மாறித்
தூயதிருவிளக்கெரித்தார்துளக்கறுமெய்த்தொண்டனார். (௫)

இவ்வகையாற்றிருந்துவிளக்கெரித்துவரவங்கொருநாண்
மெய்வருந்தியரிந்தெடுத்துக்கொடுவந்துவிற்கும்பு
லெவ்விடத்தும்விலைபோகாதொழியவுமிப்பணியொழியா
ரவ்வரிபுல்லினைமாட்டியணிவிளக்காயிடவெரிப்பார். (௬)

முன்புதிருவிளக்கெரிக்குமுறையாமங்குறையாமன்
மென்புல்லுவிளக்கெரிக்கப்போதாமைமெய்யான
வன்புபுரிவாரடுத்தவினைக்குத்தந்திருமுடியை
யென்புருகமடுத்தெரித்தாரிருவினையின்றொடக்கெரித்தார் ()

தங்கள்பிரான்றிருவுள்ளஞ்செய்துதலைத்திருவிளக்குப்
பொங்கியவன்புடனெரித்தபொருவிறிருத்தொண்டர்க்கு
மங்கலமாம்பெருங்கருணை வைத்தருளிச்சிவலோகத்
தெங்கள்பிரான்கணம்புல்லரினிதிறைஞ்சியமர்ந்திருந்தார்.()

திருவாதவூரர்புராணத்திலும் மாணிக்கவாசகசுவாமிகள் சிதம்பரத்துக்கு வந்தபோது ஸ்ரீ-மத் நடராஜப்பெருமானைத் தரிசித்துப் புலீச்சுரரையும், அனந்தேச்சுரரையும் தரிசனஞ் செய்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

வியாக்கிரபாதமுனிவர் திருவடிவாழ்க.

---



சிவமயம்.

ஸ்ரீ-புலிச்சரஸ்த்லம், ஷை தீர்த்தம் இவைகளின் மகான்மியங்கள் மூலகிரந்தங்களில் ஆங்காங்குள்ளவைகளை ஸ்ரீமது பரமேசுவர தீக்ஷிதரவர்களால் எடுத்து எழுதப்பட்டமை அடியில் வருமாறு.—

பதினெண்புராணங்களுள் ஒன்ருகிய ஸ்காந்தபுராணத்தில் சனத்குமார சங்கிதையிலுள்ள சிதம்பர மகாத்மியத்தின் எட்டாவது அத்தியாயத்திலுள்ளது.

அதன்பின்னர் புண்ணியவானுன அவ்வுத்தம முனிவர் மெள்ள எழுந்தருளி அந்த ஸ்ரீ-மூலநாதருக்குப் பின்பக்கத்தில் அதிதூரமில்லாமலும், விஸ்தாரமாயுமுள்ள ஓர் தடாகத்தின் மேல்கரையில் புஷ்பங்களே பிரதானமாகவுடைய விருட்சங்கள் சூழ்ந்த அவ்விடத்தில் அழகிய ஓர் சிறு மடங்கட்டித் தவசுசெய்ய நிச்சயஞ் செய்துகொண்டு அம்மடத்தினடுவில் சாஸ்திர விதிப்படி தேவேசனைப் பிரதிஷ்டை செய்து அவ்விசுவேசரையும், ஸ்ரீ-மூலநாதரையும் பரமபக்தியுடன் சார்வகாலமும் பூசைசெய்து கொண்டு தீவிரமான தபசைச் செய்வாராயினர்.

ஷை கூவது, அத்தியாயத்திலுள்ளது.

அந்த மத்தியந்தினமகரிஷியானவர் தனது புத்திரனுன வியாக்கிரபாத ரிஷியால் தன்னுடைய திருமடத்தில் விதிப்

படி ஸ்தாபிக்கப்பட்ட பரமசிவனைப் பக்தியுடன் பூசைசெய்தார். அவ்விடத்தி லிருந்துகொண்டு அவ்வனத்திலுண்டான இரசமுள்ள கந்தமூலாதிகளால் சரீரதாரணஞ் செய்துகொண்டு அளவிறந்த காலங்களை ஒருகணமாகப் போக்குவாராயினர்.

ஷை ௧௬-வது, அத்தியாயத்திலுள்ளது.

வியாக்கிரபாதமகரிஷியானவர் அப்பதஞ்சலி மகாமுனிவரைத் தனது ஆச்சிரமத்தின் சமீபத்திலுள்ள தீர்த்தத்திலும் ஸ்நாநஞ் செய்வித்துத் தன்னுடைய ஆச்சிரமத்தில் விதிபூர்வகமாக ஸ்தாபிக்கப்பட்ட மகேசுரருக்கும் புஷ்பாஞ்சலி செய்யும்படி செய்தார்.

ஷை ௨௩-வது, அத்தியாயத்திலுள்ளது.

தன் பெயரையே அடையாளமாயுள்ள ஸ்தானத்திலும் முன்னமே ஸ்தாபிக்கப்பட்டிருக்கிற மகாலிங்கத்துக்கும் ஆதரவுள்ள இரண்யவன்ம சக்கரவர்த்தியால் பூசைசெய்வித்தார்.

ஷை ௨௪-வது, அத்தியாயத்திலுள்ளது.

ஓ அரசனே, இந்தப் பெரிய தில்லைவனத்தில் ஆச்சிரமஞ் செய்துகொண்டு பயமில்லாதவனாய்ச் சதாசந்துஷ்டனாய்த் தவசு செய்துகொண்டு அனேக காலம் வசிக்கின்றேன்; அங்ஙனம் வசிக்கும் எனக்கு அனேக வற்புதங்களுண்டாயின. அந்த வற்புத சரித்திரங்களைக் கணக்கிட யாம் வல்லோமல்லேம்.

ஷ அத்தியாயம் மற்றோரிடத்திலுள்ளது.

ஸ்ரீமானான அவ்வசிட்ட முனிவரானவர் நடராஜ தரிசனஞ் செய்துகொண்டு அங்ஙனம் நின்று புறப்பட்டு வியாக்கிரபாதருடைய ஆச்சிரமத்தை யடைந்து அவரால் விதிவத்தாகப் பூசிக்கப்பட்டவராய் அவ்விடத்தில் ஒரு தினம் வசித்தார்,

பதினெண்புராணங்களுள் ஒன்றான சைவபுராணத்தினது ஏகாதசருத்ர சம்கிதையில் சொல்லப்பட்ட புண்டரீகபுர மகான்மியம் - ௬௨-வது அத்தியாயத்திலுள்ளது.

ஸ்ரீமத் சபாநாதருக்கு மேற்றிசையில் வியாக்கிரபாதேசுரம் எனநாமம்பெற்ற ஓர் புண்ணிய ஸ்தானமுண்டு; அவ்விடத்தில் வியாக்கிரபாத மகாரிஷியானவர் உமாகாந்தரை ஸ்தாபித்துப் பூசைசெய்தார். அந்தத் தேவர்க்கு எதிரில் உத்தமமான வியாக்கிரபாதம் என்னும் நாமமுடைய ஓர் தீர்த்தமுளது. அந்தத் தீர்த்தம் சமஸ்த தேவதைகளாலுஞ் சேவிக்கப்பட்டது. அந்தத் தீர்த்தத்தில் பாநுவாரத்திலும், தினச்சித்ரங்களிலும், விதிபாதயோகத்திலும், சந்திரசூரிய கிரணங்களிலும் ஸ்நாநஞ்செய்பவர்கள் சமஸ்தபாவங்களினின்றும் விடுபடுவர்கள். இந்தத் தீர்த்தத்தில் புரட்டாசிமாசம் அஷ்டமிதிதியில் விசேஷமாக ஸ்நாநஞ்செய்து தனதான்யாதிதானங்கள் செய்து தேவரைத் தரிசித்தவர்கள் மோட்சமடைவர்கள். இதில் ஸ்நாநமாத்திரத்தால் அப மிருத்து, ஜரை, வியாதி இவைகள் நசிக்கும். இந்தத் தீர்த்தம் இந்த க்ஷேத்திரத்திலுள்ள தீர்த்தங்களுள் நாலாவது தீர்த்தமென்று பார்வதிக்குப் பரமசிவனால் அருளிச்செய்யப்பட்டது.

ஷை அத்தியாயம் மற்றோரிடத்திலுள்ளது.

தைமாச அமாவாசையில் இந்தத் தீர்த்தங்களில் கிரமமாக ஸ்நாநஞ்செய்யும் இந்த க்ஷேத்திரவாசிகளான ஜனங்களுக்கு அறியாமையினாலுண்டாகிய சிவத்துரோகமொழிந்த ஏனைய சமஸ்தபாவங்களும் நிவிர்த்தியாய்விடும்.

ஷை மற்றோரிடத்திலுள்ளது.

வியாக்கிரபாதேசுரமென்றும், அநந்தேசுரமென்றும் இரண்டு உத்தமமான லிங்கங்கள் இருக்கின்றன.

ஸ்ரீ-வித்தியாரண்ய சுவாமிகளால், அஷ்டாதசபுராணங்களினின்று சங்கிரகிக்கப்பட்ட சிவகதாமிர்த சாரசங்கிரக சங்கரவிலாச கிரந்தத்திலுள்ள ஹேமசபாநாத மகான்மியம் நான்காவது அத்தியாயத்திலுள்ளது.

அந்தவிடத்தில் வியாக்கிரபாத மகரிஷியானவர் வியாக்கிரேசுரமென்னுஞ் சிவலிங்கத்தைப் பிரதிட்டை செய்து சந்தோஷத்தை யடைந்தார்.

ஷை ரு-வது, அத்தியாயத்திலுள்ளது.

வியாக்கிரபாத மகரிஷியும், பதஞ்சலி மகரிஷியும் தங்கள் தங்கள் பெயரால் பிரதிஷ்டை செய்யப்பட்ட வியாக்கிரேசுரரையும், அநந்தேசுரரையும் ஒழிவில்லாமல் பஜனைசெய்துகொண்டு பக்திசாலிகளாகத் தபசுசெய்துகொண்டிருந்தார்கள்.

ஷை எ-வது, அத்தியாயத்திலுள்ளது.

வியாக்கிரபாதரானவர் அந்தத்தன்னுடைய ஆச்சிரமத்தில் வியாக்கிரேசலிங்கத்தைப் பிரதிஷ்டைசெய்தார்.

ஷ அ-வது அத்தியாயத்திலுள்ளது.

வியாக்கிரபாதபகவானும், மகாப் பிரபுவான வியாக்கி ரேசுராருடைய ஆக்ஞையால் அந்த இரண்யவன்ம ராஜ னுக்கு எவ்விடத்திலும், எவனிடத்திலும், எக்காலத்திலும் ஜயத்தைக் கொடுப்பதான புலிக்கொடியைக் கொடுத்தருளி னார்.

ஷ ௧௦-வது அத்தியாயத்திலுள்ளது.

எவ்வனப் பிரதமென்று நாமமுள்ள ஓர் மகா தீர்த்த முளது. நிர்மலசித்தத்துடன் அந்தத் தீர்த்தத்தில் ஸ்நாகம் பண்ணுகிறவன் சௌபாக்கியத்தை யடைவன். அமிர்தமு ண்டவனுக்குளதாகும் எவ்வனம்போல இந்தத் தீர்த்தஸ்நாந பானங்களாலும் ஜனங்கள் நித்திய எவ்வனுளாக ஆகிவிடுவா ர்கள். இவ்விஷயத்தில் ஆத்மஞானிகளால் ஸ்துதிக்கப்பெற்ற ஓர் பெரிய கதையுண்டு; அதாவது திருநீலகண்டநாயனாரு டைய சிவபக்தியினல் பிரகாசப்படுத்தப் பட்டதென்றாரம் பித்து தில்லைவாழந்தணர்களாகிய தீக்ஷிதர்களாலும், சிவ யோகிவடிவமா யெழுந்தருளி வந்த ஸ்ரீ-நடராஜப் பெருமா னும் தீர்மானித்ததையே நல்லதென்றெப்பித் தனது பத் தினியால் ஓர் நுனியில் பிடிக்கப்பட்ட ஓர் மூங்கில் கழியைப் பிடித்துக்கொண்டு அத்திருநீலகண்டநாயனாரும், அவர் பத் தினியாரும் எவ்வன தீர்த்தத்தில் மூழ்கினார்கள். உடனே அத்தம்பதிகள் ஸ்தலவாசிகளால் சந்தோஷமாயும், ஆச்சரிய கரமாயும் பார்க்கபட்டார்கள். அத்தடாகத்தினின்றும் எவ்வ னத்தோடும் அழகிய சரீரமுடையர்களா யெழுந்தார்கள். இதைக்கண்டு எண்பது வயது சென்ற கிழத்தம்பதிகள் திவ்

விய எவ்வனுளாய் காணப்படுகின்றார்களே இஃதென்ன ஆச்சரியம் எனும் பெருஞ் சத்தமுண்டாயிற்று. உடனே தேவர்கள் புஷ்பவருஷம் வருஷித்தார்கள். அநந்தரம் அத் தம்பதிகளுக் கெதிரில் சாட்சாத் ஸ்ரீ-சிற்சபேசர் தரிசனங் கொடுத்தருளினர். அத்தம்பதிகள் அப்பார்வதி நாதனை நமஸ்கரித்து ஸ்துதித்து அவரிடம் வரம் பெற்றார்கள் என்பது முதலிய கதைகள் அந்த அத்தியாய சமாப்தி பரியந்த முள்ளன.

மஹேதிகாசமான் சிவரகசியம்

எ-வது அம்சத்திற் சொல்லப்பட்ட சிதம்பரமாத்மியத்திலுள்ளது.

எவ்வனத்தைக் கொடுக்குந் தீர்த்தம் எந்த க்ஷேத்திரத் திலுண்டோ அதுவே பூலோகத்தில் பரமபாவனமானக்ஷேத் திரம்.

ஷை கூ-ம் அம்சம் கூஉ-ம் அத்தியாயத்திலுள்ளது.

வெள்ளாற்றங் கரையிலுள்ளதென் றாரம்பித்து அதன் பின் துவிஜரானவர் நித்தியம் வியாக்கிரேசுர சிவாலயத்தில் கிரகக்ஷேத்திராதிகளை விற்றுச் சிவசந்நிதியில் தீபம்போட்டு வந்தார். அவருடைய பக்தியின் அருமையைப் பார்த்துப் பரமசிவன் தமது பதவியில் சேர்ப்பித்துக்கொண்டார் என்று முடிவு.

வியாக்கிரபாத முனிவர் திருவடி வாழ்க.

---

உ

𑌶𑌿𑌵𑌂.

𑌸𑍍𑌕𑌾𑌨𑍍𑌦𑍇 𑌪𑍁𑌰𑌾𑌣𑍇 𑌸𑌨𑌤𑍍𑌕𑍁𑌮𑌾𑌰𑌸𑌂𑌹𑌿𑌤𑌾𑌯𑌾𑌂
𑌚𑌿𑌦𑌂𑌬𑌰𑌮𑌾𑌹𑌾𑌤𑍍𑌮𑍍𑌯𑍇
𑌷𑌷𑍍𑌠𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑍇.

---

𑌤𑌤𑍋 𑌨𑌿𑌮𑌗𑍍𑌨𑌦𑍃𑌶𑌨𑌮𑍈𑌕𑌸𑍍𑌸𑌾 𑌕𑍃𑌤𑍀𑌶𑌾𑌨𑌿𑌵𑌾𑌸𑌂 𑌭𑌵𑌃। 𑌤𑌸𑍍𑌯𑍈𑌵𑌪𑌶𑍍𑌚𑌿𑌨𑌃𑌪𑌶𑍍𑌚𑌾 𑌜𑍍𑌞𑌾𑌤𑌿𑌦𑍍𑌵𑌾𑌰𑍇𑌣 𑌵𑌿𑌸𑍍𑌤𑍃𑌤𑍇 𑌤𑌟𑌾𑌕𑌸𑍍𑌯𑌾𑌤𑌟𑍇 𑌰𑌮𑍍𑌯𑍇 𑌪𑍍𑌲𑌕𑍍𑌷𑌵𑍃𑌕𑍍𑌷𑌸𑌮𑍂𑌲𑌕𑍇 । 𑌨𑌿𑌜𑌾𑌲𑌯𑌮𑌰𑌿𑌕𑌾𑌂𑌰𑌸𑍍𑌯𑌾𑌂 𑌤𑌪𑌸𑍇 𑌕𑍃𑌤𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑌃 । 𑌤𑌸𑍍𑌯𑍈𑌵 𑌪𑌶𑍍𑌚𑌿𑌮𑌦𑍇𑌶𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌾𑌪𑍍𑌯 𑌵𑌿𑌧𑌾𑌨𑌤𑌃 । 𑌨𑌿𑌯𑌤𑌂 𑌤𑌤𑍍𑌰 𑌵𑌿𑌶𑍇𑌷𑌂 𑌶𑍍𑌰𑍀𑌮𑍂𑌲𑌸𑍍𑌥𑌾𑌨𑌵𑌾𑌸𑌿𑌨𑌂 । 𑌪𑍂𑌜𑌯𑌨𑍍𑌨𑍁𑌪𑌾𑌯𑌾𑌹𑌸𑍍𑌤𑍍𑌯𑌾 𑌤𑌪𑌸𑍍𑌤𑍀𑌵𑍍𑌰𑌂 𑌚𑌕𑌾𑌰 𑌸𑌃 ॥

𑌦𑌶𑌮𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑍇.

𑌶𑍍𑌰𑍁𑌤𑍇 𑌨𑌾𑌰𑌦𑍋𑌕𑍍𑌤𑌾𑌯𑌾𑌞𑍍𑌚 𑌤𑍇𑌨 𑌪𑌾𑌣𑍍𑌡𑍍𑌯𑍇𑌨 𑌯𑌶𑍍𑌶𑌿𑌵𑌃 । 𑌸𑍍𑌥𑌾𑌪𑌿𑌤𑍋 𑌮𑌧𑍍𑌯𑌾𑌹𑍍𑌨𑍇𑌨 𑌤𑌞𑍍𑌚 𑌹𑌸𑍍𑌤𑍍𑌯𑌾𑌸𑌦𑍍𑌵𑌯𑌤𑍍 । 𑌸𑍍𑌵𑌾𑌦𑍁𑌭𑌿𑌃 𑌕𑌨𑍍𑌦𑌮𑍂𑌲𑌾𑌦𑍍𑌯𑍈𑌃 𑌪𑌰𑍍𑌯𑌨𑍁𑌤𑌪𑍋𑌨𑌾𑌶𑌹𑍇𑌤𑍁𑌭𑌿𑌃 । 𑌤𑌤𑍍𑌰 𑌕𑌾𑌮𑌦𑌸𑌂𑌵𑍇𑌦𑍍𑌯𑌂 𑌨𑌿𑌨𑌾𑌯 𑌕𑍍𑌷𑌣𑌮𑌾𑌤𑍍𑌰𑌵𑌤𑍍 ॥

𑌷𑍋𑌡𑌶𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑍇.

𑌸𑍍𑌵𑌾𑌶𑍍𑌰𑌮𑌾𑌹𑍍𑌵𑌣𑍍𑌡𑍀𑌸𑍇𑌚𑍍𑌚 𑌤𑌂𑌸𑌂𑌸𑍍𑌥𑌾𑌪𑍍𑌯 𑌤𑌤𑍍𑌕𑍁𑌟𑍀𑌂 । 𑌸𑍍𑌵𑌾𑌶𑍍𑌰𑌮𑍇 𑌯𑍋𑌗𑌿𑌨𑌾𑌨𑍇𑌨 𑌸𑍍𑌥𑌾𑌪𑌿𑌤𑍋𑌹𑍍𑌯𑌨𑌨𑍍𑌤𑍇𑌶𑍍𑌵𑌰𑌃 । 𑌤𑌸𑍍𑌯𑌾𑌭𑌿𑌷𑍇𑌕𑌨𑌾𑌯𑍇𑌨 𑌪𑌾𑌷𑌾𑌙𑍍𑌕𑍁𑌰𑌿𑌕𑌾𑌰𑌯𑌤𑍍 ॥

𑌤𑍍𑌰𑌯𑍋𑌵𑌿𑌂𑌶𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑍇.

𑌸𑍍𑌵𑌨𑌾𑌮𑌚𑌿𑌹𑍍𑌨𑌸𑌾𑌨𑍇𑌨 𑌲𑌿𑌙𑍍𑌗𑌂 𑌸𑌂𑌸𑍍𑌥𑌾𑌪𑌿𑌤𑌂 𑌪𑍁𑌰𑌾 । 𑌤𑌸𑍍𑌯𑌾𑌪𑍍𑌯𑌕𑌾𑌰𑌯𑌤𑍍𑌪𑍂𑌜𑌾𑌂 𑌸𑌾𑌦𑌰𑍇𑌣 𑌮𑌹𑍀𑌭𑍁𑌜𑌾 ॥

## 𑌅𑌷𑍍𑌟𑌾𑌵𑌿𑌂𑌶𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑍇

𑌅𑌤𑍍𑌰 𑌦𑍍𑌵𑌿𑌜𑌹𑌾𑌰𑌣𑍇 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌕𑍋𑌪𑌾𑌜𑍍𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨𑌃 । 𑌤𑌪𑌸𑍍𑌯𑌨𑍁𑌷𑍍𑌠𑌿𑌤𑌂 𑌶𑍍𑌰𑍁𑌤𑌃 𑌨𑌿𑌵𑌸𑌨𑍍𑌸𑍍𑌵𑌶𑍀𑌲𑌰𑌾𑌨𑍁𑌭𑌵𑌹𑌨𑍍𑌤𑍁 । 𑌅𑌤𑍍𑌰𑌾𑌗𑍍𑌰𑌹𑌾𑌤𑌾𑌨𑌿𑌵𑌸𑌤𑍋 𑌜𑌾𑌤𑌾𑌨𑍍𑌯𑌨𑍇𑌕𑌶𑌃 । 𑌅𑌨𑌿𑌤𑌾𑌨𑌿 𑌤𑌾𑌨𑌿 𑌹 𑌸𑌂𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌂 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌕𑌾𑌰𑌵𑌯𑌮𑍍 ॥

## 𑌤𑌥𑍈𑌵𑌾𑌨𑍍𑌯𑌤𑍍𑌰

𑌤𑌥𑌾 𑌨𑌿𑌮𑍍𑌨𑌪𑍍𑌰𑌸𑍍𑌰𑌵𑌸𑍍𑌯 𑌵𑍍𑌯𑌾𑌘𑍍𑌰𑌵𑌾𑌧𑍋𑌦𑍍𑌭𑌵𑌂 𑌊𑌰𑍍𑌮𑌿𑌭𑌿𑌃 । 𑌨𑌿𑌨𑌾𑌯 𑌤𑌤𑍍𑌰𑌾𑌹𑍋𑌰𑌾𑌤𑍍𑌰𑌂 𑌵𑌿𑌧𑌿𑌵𑌤𑍍𑌤𑍇𑌨 𑌪𑍂𑌜𑌿𑌤𑌃 ॥

𑌶𑍈𑌵𑌪𑍁𑌰𑌾𑌣𑍇 𑌵𑍃𑌦𑍍𑌧𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌸𑌂𑌹𑌿𑌤𑌾𑌯𑌾𑌂

𑌪𑍂𑌰𑍍𑌵𑌶𑍀𑌕𑌪𑍂𑌰𑍍𑌵𑌾𑌹𑌾𑌦𑍍𑌰𑍇

## 𑌷𑌷𑍍𑌠𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑍇

𑌵𑍍𑌯𑌾𑌘𑍍𑌰𑌵𑌾𑌧𑍇𑌶𑍍𑌵𑌰𑌸𑍍𑌯𑌾𑌸𑍍𑌯 𑌸𑍍𑌥𑌾𑌨𑌂 𑌦𑍇𑌵𑌸𑍍𑌯 𑌪𑌶𑍍𑌚𑌿𑌮𑍇 । 𑌯𑌤𑍍𑌰 𑌦𑍇𑌵𑌾𑌰𑍍𑌚𑌕𑌾𑌣𑌾𑌂 𑌪𑍂𑌜𑌯𑌾𑌸𑌾𑌸𑌮𑌵𑍇𑌤𑌾𑌨𑌿𑌃 । 𑌤𑌦𑍇𑌵 𑌪𑌾𑌰𑌦𑌾𑌯𑌤𑌾𑌰𑍍𑌥𑌂 𑌶𑍍𑌰𑍂𑌯𑌤𑍇 𑌤𑍀𑌰𑍍𑌥𑌮𑍁𑌤𑍍𑌤𑌮𑌮𑍍 । 𑌵𑍍𑌯𑌾𑌘𑍍𑌰𑌵𑌾𑌦𑌾𑌧𑌿𑌪𑌂 𑌯𑌚𑍍𑌚 𑌸𑍇𑌵𑌿𑌤𑌂 𑌸𑌰𑍍𑌵𑌦𑍈𑌵𑌤𑍈𑌃 । 𑌅𑌗𑍍𑌨𑌿𑌵𑌾𑌰𑌿𑌪𑍁𑌷𑍍𑌕𑌰𑌿𑌣𑍀 𑌪𑍍𑌰𑌤𑍀𑌵𑌾𑌤𑍇 𑌤𑌯𑍈𑌵 𑌚 । 𑌸𑌮𑌯𑍇 𑌪𑍁𑌣𑍍𑌯𑌦𑍇 𑌹𑍇𑌮𑌾𑌦𑍍𑌰𑌿𑌸𑍍𑌨𑌾𑌨𑌪𑌾𑌵𑌾𑌪𑌹𑌂 𑌸𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 । 𑌅𑌨𑍍𑌯𑌕𑌾𑌯𑌾𑌂 𑌸𑍍𑌥𑌿𑌤𑌸𑍍𑌯𑍈𑌵 𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌷𑍍𑌟𑌮𑍀𑌂 𑌵𑌿𑌶𑍇𑌷𑌤𑌃 । 𑌸𑍍𑌨𑌾𑌨𑌪𑌾𑌨𑍀𑌯 𑌸𑌂𑌦𑍇𑌵𑌂 𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾𑌰𑍍𑌥𑌸𑍍𑌯𑌾𑌪𑌵𑍇𑌶𑌨𑌃 । 𑌅𑌪𑍂𑌰𑍍𑌵𑌤𑍀𑌰𑍍𑌥𑌜𑌨𑍍𑌮𑌾𑌵𑍍𑌯𑌾𑌧𑌿𑌃 𑌪𑍁𑌣𑍍𑌯𑌶𑍀𑌲𑌸𑍍𑌨𑌾𑌨𑌮𑌾𑌤𑍍𑌰𑌤𑌃 । 𑌅𑌤𑌸𑍍𑌤𑍀𑌰𑍍𑌥𑌮𑌿𑌦𑌂 𑌪𑍁𑌣𑍍𑌯𑌂 𑌤𑍇 𑌦𑍇𑌵𑍈𑌰𑌪𑍍𑌯𑍇𑌵 𑌨𑌹𑌿𑌲𑌕𑍍𑌷𑌿𑌤𑌮𑍍 ॥

தஸ்மை த்ரவாவாத்ர.

ஊகலெகெக்ஸ்ரயாஞா தீஸெஷ்வெஷயஸாக்ர
ஊாஸ | கத்ருஷ்யிதாநாஊஜ்ஞாநா ஓவ்ரஸ்வாவஞ்ஜாயதெந்ர
ணாஂ | ஷஷஷ்னாநாவிஶரஸெஜ்ய்த ஶிவஜெஸ்ராஹஂவிநா
ஊரநெ ||

தஸ்யைவாந்யதஃ.

வ்ராவ்யவாஷெஶ்வரஜெஞ்வ தஶா நஜெஶ்வராஹியஂ||
ஶ்ரீஊவிஓவ்ராரணவ்ஹ்வாவிஷஂஹ்ர ஷீத
ஶிவகுஶாஊ்ர தஷாரஷஂஹ்ர ஹஷஂகரவிஜ்ராஜெ
ஹெஊஷஹாநாயஊாஹாஜெத்ஷ்ய
வதாஸுஸ்ராஜ்ய்ராயெ.

ஸிஂஹவ்ராஜெ்வ ஶ்வரஂதத்ர வ்ரதிஷ்வாவ்வ்ரஜொஓஜெத||
வஞ்ஊராஜ்ய்ராயெ.

வ்ராஜெ ஶஊவ்ய நஜெஶ ஊவிஹக்த்ர்யாஷ்வநாஊதஃ |
வ்ரதிஷ்வாவிதஊஶ்ரராஞஂ ஹஜஞெளஹக்திஶாஸிஜெநள.

ஸ்வஊராஜ்ய்ராயெ.

ஸிஂஹஂவ்ராதிஷ்விவத்தத்ர வ்ராவ்யவாஷ்வ்ராவ்ய ஶஂகரஂ||
குஷ்டெஊ.

ஹஶவாந்வ்ராவ்யவாஷொவி வ்ராஜெ்வ்ய ஶஷ்யாஜ்ஞயாவி
ஜெஹாஃ | தஸ்ஜெஷ்ஜெஜத்ர ஸ்வஜஂஶாஜெ்ஜ ஓத்தவாந்வ்ராவ்யஷா
ஷிதஂ||

ஓஶஜெஊ.

நிஜெஸ்தஞஊஹாதீஸுஸஂ யஞாந்ராயெளவநவ்ரஓஂ |
யத்ரஷ்நாக்ஷாநஜெராயாதி ஜெஷளஹாஹ்ரஂநிஜெஸ்ஜராஶயஃ |

